should do ANNADANAM to poor. Feeding Ayyappas Bhakthas with big feast, assuming that we are satisfying Lord Ayyappa, is a great Sin, as during this period the Ayyappa Bakthas should have restricted food.

13) Try always to be calm and even when you are being provoked by others, control your temper and say the only word " SARANAM AYYAPPA"

14) Address all men as "Ayyappa or Swami" (Not only Vratham Ayyappas) and ladies and girls, including your wife as "MALIGAPURAM" and boys as "Manikanta". Especially the Muslims should addressed as VAVAR SWAMY.

15) The main principle of Ayyappa Deeksha is, that all religions and castes are to be treated as ONE. Any body (Whether they are Christians, Muslims or other religion) having faith in Ayyappa, can worship Him. Ladies can participate in Poojas and Bhajans, but only girls below 10 years who have not attained Maturity and Ladies who have reached menopause, after certain age, can very well perform the Yatra duly observing the Vratham.

16) Manasa, Vaacha and Karmana (with mind, word and duty) have full devotion to Lord.

17) Though there is no prescribed dress to wear during this Vratham and Yatra period, to distinguish you as Ayyappa on Deeksha either black, blue or saffron dresses can be worn.

18) As your mind is always occupied with devotion, it is desired to have always atleast Viboothi or Kumkumam or Chandanam or Namam on the forehead.

**Eighteen DON'Ts:-**

1) While speaking with others, do not address in singular forms. i.e., HE, SHE, IT etc. ladharan and the commencement of Vratham, till reaching home after Darsanam and removing of Mala, do not consume any alcoholic, intoxicating substance and to avoid eating non-vegeterian food.

3) Avoid oil bath, smoking and chewing of pan during this period.

4) Never get angry under any circumstances.

5) Do not tell lies.

6) Do not hurt others feelings either by word or action

7) Do not take part in death ceremony. After the Mala dharan during the Vratham period, if any close relatives passes away, adhere to your family traditions and as far as possible avoid performing the Yatra this time. As per the advise of Guruswamy, late poojya Shri. Kambamkudi Meenakshisundaram, if it is of distant relatives, you can remove the Mala, take bath observe the mourning for that period without removing the deeksha and on the completion of the said period, take bath, ,keeping three times very little cow dung every time and then chant SARANAM 108 times

or if you had GAYATRI MANTRAM upadesam already, chant 108 times and wear the Mala after purifying it with Panchagavyam, through Guruswamy or in the temple.

8) Do not tease anybody or any living things

9) Do not earn illegal money.

10) Do not scold any Ayyappa even they are your disciple.

11) Do not point out other's mistakes

12) Do not take part in Court Cases and stand surety for anybody during this period.

13) Do not take part in Dramas or in Cinemas in which you have to act in undesirable scenes and avoid seeing such Cinemas.

14) Either knowingly or unknowingly, do not commit sins.

15) Do not go near or touch ladies who are in monthly period. If it happens it is advised to have bath immediately and to take "PANCHAGAVYAM" if available or chant SARANAM 108 times before attending other works.

16) Do not have shaving and hair cuttings during this period.

17) Avoid sleeping day time and to avoid sleeping long time in night.

18) As far as possible avoid taking solid food outside and consume only fresh food. If you have to take food outside, due to unavoidable circumstances, have it after bath and avoid spending money lavishly. After having Dharsanam and after reaching home only remove the Malas. On reaching home, breaking coconut at entrance, keep the Prasadam at your Pooja place at home, take bath, do Harathi for the Prasadam with Naivedyam, distribute the Prasadam for the entire family of yours and then remove the Mala yourself, duly chanting Saranam or chanting the Manthras for the removal of Mala, if you know it. Removing the Mala en-route is not advisable.

**OTHER POINTS COMMONLY TO BE OBSERVED**

1) As you have to spend atleast two nights in the forest, during your Yatra and as you won't get comfortable beds, it is advised to practice by sleeping on mats without pillows.

2) In the book form which the above rituals are copied, there is no information about the particular kind of dress to be own during this period. But for identifying as Ayyappas, it has become a custom to wear either black, blue or saffron color dresses

3) As the route through out the forest is slippery as well as with smooth rocks, it is advised to practice walking without foot wear during this periods.

# சபரிமலைப் பயணம்
## (சிங்கை கிருஷ்ணன்)

புராணங்கள் வெறும் கட்டுக்கதைகளல்ல. பொழுதுபோக்காய் எழுதப் பட்டதோ படிக்கப்படுவதோ அல்ல. நாம் கடைப்பிடிக்க வேண்டிய நெறிமுறை களை அவை வலியுறுத்தும், நல்வாழ்வின் இரகசியங்களை வெளிப்படுத்தும். அவைகள் கட்டுக்கதையாகக் கூட இருக்கலாம். அல்லது புனைகதையாகக் கூட இருக்கலாம். அதில் சொல்லப்படும் நீதிகளை, வாழ்க்கைத் தத்துவங்களை, தர்மங்களை மட்டும் எடுத்துக் கொள்ளவும்.

மனிதர்கள் எப்போதும் தர்மத்திலிருந்து தடம் புரண்டு அதர்மத்தில் தங்களை அழித்துக் கொள்ள முற்படுகிறார்களோ, அப்போது புராணங்-களில் கூறப்படும் சாரங்களை எண்ணிப் பார்த்தால் அதன் உள்ளார்ந்த பொருள் விளங்கும். ஐயப்பன் எடுத்த அவதாரம் தர்மத்தையும், சத்தியத்தையும், உலகில் நிலைநாட்டுவதற்குத்தான். நற்பண்புகள் வளர்த்துக் கொண்டவர்கள் தான் தடைகளை உடைத்து, பிரச்சனை களை ஊதித்தள்ளி, சவால்களை வென்று தங்கள் வாழ்க்கையை ஒளிமயமாக்கிக் கொள்ள முடியும். சபரிமலை நடைபயணமே வாழ்க்கைப் பயணத்தின் தத்துவத்தைக் கொண்டிருக்கிறது. அது சரணாகதித் தத்துவம்.

''உன்னை இறைவனிடம் முழுமையாய் ஒப்படைத்துக் கொள். அவனை பூரணமாய் நம்பு. உன்னைக் காப்பது அவன் பொறுப்பு. ஐயத்தையும், அச்சத்தையும் விட்டுவிடு'' இதுதான் அந்தத் தத்துவம்.

போகிற வழியில் எத்தனையோ கொடிய விலங்குகள் (வாழ்க்கையில் அவை பிரச்சனைகளாய், சவால்களாய் இடம் பெறும்) எதிர்படலாம். இறைவனின் மீது நம்பிக்கை வைத்தால் அவன் ஆபத்துக்களிலிருந்தும், பேரபாயங்களிலிருந்தும் நம்மைக் காப்பாற்றுவான்.

"ஐயனே, எல்லாம் உன் விருப்பம்" என்று ஐயப்ப பக்தர்கள் முடிவை அவனிடமே விட்டுவிட வேண்டும். பகவானின் வாசலை அடையும்போது கர்மங்கள் எல்லாம் நீங்கி விடுவதாய் ஐதீகம். அங்கே தன்னுடைய கர்ம வினைகளற்றவனாய் மனிதன் நிற்பான்.

பக்தன் கடந்து செல்லும் பதினெட்டுப் படிகளும் தத்துவார்த்த-மானவை. தேங்காய் உடைப்பது இறைவனோடு இரண்டறக்கலப்பதைக் குறிக்கும். அப்போது உடல் உதறப்பட்டதாய் கருதப்படும். உடைக்கப் பட்ட தேங்காய் மூடிகள் நெருப்பில் வீசப்படுகின்றன. அது உடல் அழிவதைக் குறிப்பதாகும். புனிதமான வாழ்க்கைதான் மனிதர்களைப் புனிதர்களாக்கும்.

சூரியனின் பயணப்பாதை தெற்குப்பக்கம் திரும்பும் காலம் ஆடிமாதம். பொதுவாக தெற்கு என்பது எமனுக்கு உரியது என்பார்கள். காலதேவனைக் கட்டுப்படுத்தும் ஆற்றல், அம்பிகைக்கு மட்டுமே உண்டு என்கிறது புராணம். அதனால் தான், மார்க்கண்டேயனைக் காப்பதற்காக தர்மதேவனை, அம்பிகை தன் உடலில் அமைந்திருக்கும் இடது பாகத்துக்கு உரிய இடதுகாலால் உதைத்தாராம் ஈசன். உயிர்களின் ஆராக்கியத்துக்கு காரணமானவன் சூரியன் என்பது மெய்ஞானமும் விஞ்ஞானமும் ஏற்றுக்கொண்ட விஷயம்.

அடுத்து, ஆடி மாதத்தில் காற்றும் மழையும் இருக்கும் 'கால்' எனும் காற்றைக் கட்டுப்படுத்துபவன். காரி, மாரியாகிய மழைக்கு தெய்வம், மாரியம்மன். இன்னொரு முக்கியமான விஷயம் ஆடி மாதத்தின்போது ஏற்படும் பருவகால மாறுபாட்டால் பரவக்கூடிய நோய் கிருமிகளை கட்டுப்படுத்தும் ஆற்றல் வேப்பிலைக்கும், எலுமிச்சைக்கும் இருக்கிறது என்பது நிரூபிக்கப்பட்ட உண்மை. அதனால் தான் அம்மன் கோயில்களில் ஆடிமாதம் பூஜைகள் அதிகம் இடம்பிடிக்கின்றன. வழிபாடு முறைகளாக நம் முன்னோர்கள் ஏற்படுத்தி வைத்தவை எல்லாம் நம் நலத்தைக் காப்பவை.

ஒரு பக்கம் மலைகளும், மறுபக்கம் கடலுமாய் அமைந்தது கேரள தேசம். குன்றாத நீர்வளமும், நில வளமும் கொண்ட அத்தேசத்தில் வட்ட வடிவில் இருப்பது பந்தள நாடு. வானுயர்ந்த மாளிகைகள், மணி மண்டபங்கள், செல்வச் செழிப்புடைய பண்டகச்சாலைகள் நிறைந்திருந்தன. பம்பையாறு அப்பகுதியில் செந்நெல்லைம், செங் கரும்பையும் அமோகமாய் விளையச் செய்திருந்தன.

பந்தள நாட்டு மன்னனான இராஜசேகரன் பாண்டிய வம்சத்தைச் சேர்ந்தவன். பக்திநெறி பூண்டொழுகிய அம்மன்னனின் ஆட்சியில் மக்கள் குறைவின்றி வாழ்ந்து வந்தனர். மன்னனுக்கு மட்டும் ஒரேயொரு குறை இருந்தது. தன் வம்சத்தை விளங்க வைக்க ஒரு வாரிசு இல்லையே என்பது தான் அது. இராஜசேகரன் பேறு வேண்டி பல தான தருமங்கள் செய்தான். வேள்விகள் நடத்தினான். நாளும் இறைவனை வழிபடும்போது அவன் நயந்து வேண்டியது பிள்ளை வரம் மட்டுமே.

கடவுள் கண் திறப்பதற்கும் காலம் கனிந்துவர வேண்டுமல்லவா? மன்னனுக்குப் பல கடமைகள் உண்டு. பகை நாட்டிடமிருந்தும், பஞ்சத்திலிருந்தும் காப்பது உட்பட. அதில் வனவிலங்குகளிடமிருந்து குடிகளைக் காப்பதும் ஒன்று.

ஒருசமயம் பந்தள நாட்டின் எல்லைப் பகுதியில் காட்டு மிருகங்கள் புகுந்து அட்டூழியம் செய்து வருவதாய் மன்னனுக்குச் செய்தி வந்தது. அங்குள்ள மக்களைக் காப்பதற்காக வேண்டி மன்னன் வேட்டைக்குச் செல்ல சித்தமானான் வீரமுடன் விலங்குகளை வேட்டையாடிய மன்னன், அந்திப்பொழுதில் சற்றே இளைப்பாறினான். சோர்வு நீங்க பம்பையாற்றில் நீராடினான். சிவ தியானம் செய்ய அமர்ந்தான்.

அத்தருணத்தில், எங்கோ ஒரு குழந்தையின் அழுகுரல் கேட்டது. குரல் வந்த திக்கில் பார்வையையும் கவனத்தையும் செலுத்தினான் மன்னன். மனித சஞ்சாரமற்ற காட்டுக்குள் மழலையின் அழுகை ஒலியா? என்று வியப்படைந்தான். பரிவாரங்கள் சூழ அழுகுரல் கேட்ட திசை நோக்கி நடந்தான். அவர்கள் தொலைவில் ஓர் ஒளிப்பிழம்பு தெரியக்கண்டனர். அங்கே, பம்பையாற்றின் கரையில் குழந்தை யொன்று பிரகாசத்துடன் காணப்பட்டது. எல்லோரும் வியப்புடன் அக்குழந்தையை நோக்கினர். பிரகாசத்துடன் காணப்பட்ட குழந்தை மானிடப்பிறவியாய் இருக்க முடியாது. தெய்வத்தின் அவதாரம் என்று எண்ணினான். மணிமாலையுடன் கண்டத்தை உடைய இக்குழந்தை பிற்காலத்தில் மணிகண்டன் என்ற திருநாமத்துடன் விளங்கியது.

இறைவன் காட்டுவிப்பவனே தவிர ஊட்டுவிப்பதில்லை. ஆனால், மன்னன் இராஜசேகரன் விஷயத்தில் அவன் ஊட்டுவிக்கவும் செய்தான். குழந்தைக்காய் தவம் கிடந்தவனுக்கு ஓர் உன்னதக் குழந்தையை வழங்கியதோடு அதன் அற்புத சக்தியையும் அல்லவா முன்கூட்டியே உணர்த்தி இருக்கிறான். பம்பைக் கரையில் அவதரித்து, பந்தள அரண்மனையில் கால் பதித்து, மணிகண்டன் தவழ்ந்து, எழுந்து நடந்து, அரண்மனை எங்கும் ஓடி விளையாடினான். ஐந்து வயதானபோது முறைப்படி கல்வி பயில குருகுல வாசத்திற்கு அனுப்பினான் மன்னன்.

வேதங்களையும், சாஸ்திரங்களையும், கலைகளையும், பிழையறக் கற்றுத் தேர்ந்த ஐயப்பன் குருகுல வாசத்தைக் குறுகிய காலத்திலேயே முடித்துவிட்டான். அரச மரபினர்க்குரிய போர்க்கலையையும், அவ்வாறே திறம்படக் கற்றான். சிவசக்தி அம்சங்களை ஒருங்கே பெற்றவனுக்கு குருவித்தை அவசியமே இல்லைதான். ஆனால், அவதார இயல்புடன் பொருந்தியிருக்க வேண்டுமல்லவா, 'இவன் சாதாரண மனிதப் பிறவியல்ல' என்பதை பயிற்றுவிக்கும் காலத்திலேயே அறிந்துக் கொண்டார் குருதேவர். பயிற்சி முடியும்போது இவன் தெய்வத்தின் அவதாரம் என்பதைப் பூரணாகவே உணர்ந்துவிட்டிருந்தார்.

நேற்று போல் இன்றோ, இன்று போல் நாளையோ இருப்ப-தில்லை. மாற்றங்களைக் கொண்டு வரும் காலம். அதுவரை கருத்தரியாத அரச கோப்பெருந்தேவி கருவுற்றாள். இறைவன் திருவருளால் அரசி ஓர் ஆண்ண மகவினைப் பெற்றெடுத்தாள். பிள்ளைக்கு இராஜராஜன் என்று பெயரிட்டனர்.

காலம் ஓடுகிறது நதியின் வேகத்தில். நதியைப் போலவே ஓசையில்லாமல் பன்னிரெண் வயதுப் பாலகனானார் மணிகண்டன். மன்னன் இராஜசேகரன் முதுமையின் காரணமாக ஆட்சியதிகாரத்தைக் கொடுத்து மணிகண்டனுக்கு முடிசூட்டுவது என்று தீர்மானித்தான். முடிசூட்டு விழாவிற்கான ஏற்பாடுகளைச் செய்யும்படி உத்தரவிட்டான். அதிகாரத்தை தன் கையில் வைத்துக் கொண்டால் பிற்காலத்தில் அரசை நாம் கைக்கொண்டு விடலாம் என்ற நம்பிக்கையில் இருந்தான் அமைச்சன். முடிசூட்டு விழாவிற்கு முன் மணிகண்டனைக் கொன்று விடவும் துணிந்தான்.

மாந்திரீகர்களைக் கொண்டு சில துர்தேவதைகளை மணிகண்டன் மீது ஏவிவிட்டான். அதானல் மணிகண்டனுடைய உடலில் பிணிகள் தோன்றலாயிற்று. மனிதப் பிறவி எடுத்ததால் அதற்குரிய வினை களையும் அனுபவித்தாக வேண்டுமல்லவா! கொப்புளம், சிரங்கு, கட்டி வந்து அவதிப்பட்டார். ஐந்தெழுத்து மந்திரத்தால் வராத நலனுண்டா? தீராத பிணியுண்டா? அத்தனை மந்திரங் களுக்கும் உயிர்ப்பியப்பான மந்திரமன்றோ அது; சிவனே அனைத்திற்கும் மூலம்; சிவனின் அருளால் தீயசக்திகள் விலகி, நோயும் குணமடைந்தது.

தன்னுடைய கொலைத்திட்டத்தில் தோற்ற அமைச்சன் மேலும் அழிவுப்பாதையிலேயே சிந்தனையை ஓடவிட்டான். மணிகண்டனை எப்படியும் கொன்று தீர்ப்பதில் குறியாய் இருந்தான். இன்னொரு திட்டம் உருவானது. கோப்பெருந்தேவியை அந்தப்புரத்தில் கண்டு தான் தீட்டிய திட்டத்தைச் சொன்னான் அமைச்சன். "அரசி, தாங்கள் தவறாக நினைக்காவிட்டால் ஒன்று சொல்வேன். அரச மரபிலுதித்த இராஜராஜன் இருக்க, வனத்தில் கண்டெடுத்த யாரோ ஒருவனுக்கு முடிசூட்டுவது முறையாகத் தெரியவில்லை" என்றான்.

அரசி அவனுடைய சொற்களை ஆமோதிப்பது போல் தலை அசைத்தாள். "கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையும்" என்பது போல் அமைச்சன் அவளை வேறு விதமாக சிந்திக்க விடவில்லை. தொடர்ந்து துர்போதனைகள் செய்து அவளுடைய அறிவை மழுங்கடித்தான்.

அமைச்சன் ஒரு புதிய சூழ்ச்சித் திட்டத்தை அரசியிடம் விவரித்தான். அதன்படி "அரசி கடுமையான தலைவலியால் அவதிப் படுவது போல் நடிக்க வேண்டும். அரண்மனை வைத்தியர்கள் அளிக்கும் சிகிச்சைகளிலும் பலனில்லை என்றாக்க வேண்டும். அப்போது அமைச்சன் அழைத்து வரும் மருத்துவர் புலிப் பால் கொடுத்தால் தான் அந்நோய் தீரும் என்பார். மணிகண்டன் தாய்ப்பாசத்தில் தானே புலிப் பால் கொண்டு வருவதாய் செல்வான். அவன் புலியைத் தேடி வனஞ் சென்று அங்கே புலிபோன்ற கொடிய விலங்குகளால் கொல்லப்படுவான்" . அமைச்சனின் யோசனை அரசிக்குத் தகுதியாய் தெரிந்தது. அவள் அன்றே தலைவலி நாடகத்தை அரங்கேற்றினாள். அரசிக்குக் கடுமையான தலைவலி என்ற செய்தியை அறிந்த அரசன் அந்தப் புரத்திற்கு விரைந்தான். உடனே மருத்துவர்களை அழைத்துவர ஆணை பிறப்பித்தான். மருத்துவர்கள் வந்து வகைவகையாய் மருந்துகள் கொடுத்தும், அரசியின் தலைவலி நீங்கவில்லை. எப்படித் தீரும்? உண்மையான நோயாக இருந்தாலல்லவா மருந்தில் தீரும்.

இத்தருணத்தில் அமைச்சனின் ஏற்பாட்டில் போலி மருத்துவன் அரசியின் உடல்நிலையைப் பரிசோதிப்பது போல பாசாங்கு செய்தான். பிறகு, "அரசே! பெண்களுக்கு இத்தகைய தலைவலி வெகு அபூர்வ-மாகவே வரும். இது சாதாரண மருந்துகளால் தீரக்கூடிய தலைவலி அல்ல. அரசே நான் ஒரு மூலிகை தருவேன் அதைப் புலிப்பாலில், அதுவும் அப்போது கறந்த பாலில் கரைத்து குடித்துவிட்டால் பிறகு அடுத்த பிறவிக்கும், அரசியாருக்குத் தலைவலி தலைகாட்டாது" என்றான்.

வெளுத்ததெல்லாம் பால் என்று நம்பும் அரசன் செய்வதறியாது கலங்கினான். மணிகண்டனை அழைத்து, "புலிப்பாலை எப்படி கொண்டு வருவது? அதைக்கொண்டு வந்தால் தான் உன் அன்னையின் தலைவலி தீரும் என்று மருத்துவர் சொல்கிறார். உனக்கு ஏதும் வழி தெரிந்தால் சொல்" என்றான். மணிகண்டன் அரசனைப் பார்த்து, "தந்தையே இதற்காகவா வருந்துகிறீர்கள்? நானே சென்று புலியைக் கொண்டு வருவேன்" என்றான்.

"மகனே! இது ஆபத்தான வேலை. நான் உன்னை இதில் பணயம் வைக்க மாட்டேன்" என்றான் அரசன் பதற்றத்துடன். "தந்தையே, இது ஒரு மகன் தாய்க்குச் செய்கிற கடமை. நான் காட்டில் கண்டெடுக்கப் பட்டவன். எனக்குக் காட்டு மிருகங்களிடம் அச்சமில்லை" என்றார்.

அமைச்சனின் சூழ்ச்சியும், அரசியின் தலைவலி நாடகமும் மனிதர் களிடையே இயல்பாய் உள்ளதுதான். 'புலிப்பாலுக்கு மணிகண்டன் கானகம் செல்வது' இறைவனின் திருவுளப்படியேயாகும். வனத்தில் முடிக்க வேண்டிய காரியம் ஒன்றையும் இறைவன் திட்டமிட்டிருந்தான். அது மணிகண்டனின் அவதார நோக்கம்.

மணிகண்டனை புலிப்பால் கொண்டு வருவதற்கு காட்டுக்கு அனுப்பியது முதல், மன்னன் இராஜசேகரன் அளவற்ற மனத்தவிப்புடன் இருந்து வந்தான். மணிகண்டனை பற்றி எந்த செய்தியும் தெரிய வில்லையே என்று வருந்திக் கொண்டிருந்த சமயம், மணிகண்டன் வருகிற செய்தி அரசனுக்கு எட்டியது. மின்னல் வேகத்தில் அரண்மனை வாயிலுக்கு விரைந்தான். வேங்கைப் புலி மேல் அமர்ந்து மணிகண்டன் வருவதை, அவனது முன்னும் பின்னும் இரு பக்கங்களிலும் கூட்டமாய் தொடர்வதைக் கண்டான் மன்னன். ஓடிச்சென்று மைந்தனைத் தழுவினான்.

மணிகண்டன் அரசனை வணங்கி, "தங்கள் ஆணைப்படி புலிகளைக் கொண்டு வந்துவிட்டேன். மருத்துவரை அழைத்து தேவை யான அளவு பால் கறந்து எடுத்துக் கொள்ளச் சொல்லுங்கள்" என்றார். மணிகண்டன் காட்டுக்குச் சென்றதுமே அரசியின் தலைவலி நீங்கி விட்டது என்றும், இனி புலிப்பால் தேவைப்படாது, புலிகளைக் காட்டுக்கே அனுப்பிவிடலாம் என்று அரசன் கூறினான்.

அரசியும், அமைச்சனும் கண்களில் நீர்மல்கி, "தேவரீரை இன்னா-ரென்று அறியாமல் பிழை புரிந்து விட்டோம். எங்களை மன்னித்து நற்கதி அருளவேண்டும்" என்று மண்டியிட்டு வேண்டினர். மணிகண்டன் அரசியையும், அமைச்சரையும் மன்னித்து அருளினார். உலகில் மன்னிக்க முடியாத தவறென்று எதுவும் இல்லை. மன்னித்தல் மண்பு, மன்னிப்பதற்கும் கருணை மனம் வேண்டும். மன்னிப்பதன் மூலம் தவறு செய்தவர் திருந்தி வாழ வாய்ப்பளிக்கிறீர்கள் என்று தம்முடைய செய்கையின் மூலம் மணிகண்டன் உலகோருக்கு உணர்த்தி விட்டார்.

மணிகண்டன் மன்னரைத் தழுவி, "தந்தையே, ஒரு தெய்வீக காரியமாகவே நான் இங்கே வந்ததும், தங்களுடைய அரண்மனையில் தங்கியிருந்ததும், இப்போது அந்தக் காரியம் நடந்தேறியதும். என் மனித அவதாரத்தன்மையை பூர்த்தியாக்கியுள்ளது" என்றார்.

மணிகண்டன் தெய்வத்தின் அவதாரம் என்பதனை மக்கள் உணர்ந்தனர். என்னை தரிசிக்க என் திருக்கோயிலுக்கு வரு பக்தர்கள் விரதங்களை முறையாகக் கடைப்பிடித்தால் தான் பலன் கிடைக்கும். புண்ணிய தினமான மகர சங்கராந்தியன்று என்னை தரிசிப்பது சிறப்பு. கேரளத்திலுள்ள பதினெட்டுத் திருக்கோயில்களில் நான் குடி இருப்பேன். அவற்றுள் சபரிமலையே முக்கிய திருத்தலமாகும். பதினெட்டு தத்துவங்களையும் கடந்து வருபவர்கள் தான் என்னை அடைய முடியும். "நான் உங்களை எல்லாம் பிரிந்து செல்லவேண்டிய நேரம் வந்துவிட்டது. இதோ புறப்படுகிறேன். எமது பிரிவை எண்ணி வருந்தாதீர்கள். உமக்குள்ளே யாம் பூரணமாய் வியாபித்திருக்கிறோம்" என்று கூறிப் பேரொளிப் பிழம்பாய் மாறி மறைந்தார்.

உலகம் தர்மநெறியைக் கடைப்பிடிக்கும் வரை அமைதியாய் இருக்கும். மக்கள் அதர்ம வழியில் நடக்கத் துவங்கினால் அமைதி குலைந்து விடும். மணிகண்டனும் அவர்களுடைய விருப்பப்படியே அவர்களுடன் கல்லிலும் முள்ளிலும் நடந்து "பொன்னம்பல மேட்டுக்குச் சென்றார். அவருக்குக் கல்லும் முள்ளும் காலுக்கு மெத்தையானது. அவருடைய பக்தர்களின் கால்களுக்கும் கல்லும் முள்ளும் மெத்தை யானது. (பொன்னம்பலமேடு என்கிற காந்தமலை பம்பையாற்றின் கரையில் இருந்து பன்னிரெண்டு கல் தூரத்தில் உள்ளது. ஐயப்ப பக்தர்கள் முக்கியத்தும் கொடுக்கும் திருக்கோயில்களுள் இதுவும் ஒன்று).

மஹிஷியின் கொடுமைக்குள்ளாகி இருந்த தேவர்கள் முன்பே பொன்னம்பல மேட்டில் மணிகண்ட சொரூபத்தை பிரதிஷ்டை செய்து, தங்களைக் காத்து இரட்சிக்குமாறு வேண்டிக் கொண்டனர். அங்கே கோயில் கொண்டிருக்கும் மணிகண்டனை "பூதநாதன்" என்பார்கள். இந்திரனும், தேவர்களும் மணிகண்டன் துணையோடு போருக்கு வருவதை அறிந்த மஹிஷியின் சினம் எரிமலையாய் பொங்கியது. பன்னிரண்டு வயதே நிரம்பிய மணிகண்டன் வந்திருப்பதைக் கண்டு நகைத்தாள். மணிகண்டனுக்கும் மஹிஷிக்கும் நேருக்கு நேர் போர் படு உக்கிரமாய் நடந்தது. மணிகண்டன் மஹிஷியைத் தமது கைகளால் பற்றி வெகுவேகமாய் சுழற்றி வீசினார். அவள் பம்பை நதியை அடுத்து ஓடும் அல்சா நதிக்கரையில் விழுந்தாள்.

தீயவர்கள் தங்கள் ஆற்றலில் இறுமாப்படைகிறபோது, அவர்களை இறைவனே வதம் செய்கிறான். மஹிஷியின் விஷயத்திலும் அதுதான் நடந்தது. மணிகண்டன் சாதாரண மனிதப் பிறவியல்ல என்பதை உணர்ந்த மஹிஷி, தன் முற்பிறவியையும் அறிந்து தனக்குப் பாவ விமோசனம் அளிக்க வேண்டினாள். சாப விமோசனம் பெற்ற மஹிஷி மணிகண்டனிடம், "ஐயனே தங்களால் நான் சாபவிமோசனம் பெற்றேன், என்னை மனைவியாக ஏற்றுக் கொள்ள வேண்டும்" என்றாள்.

அவளது மனவேதனையை உணர்ந்த ஐயன் அவளை நோக்கி, "நீ மஞ்சமாதா என்ற நாமத்துடன் இங்கே கோயில் கொள்வாயாக. என்னை தரிசிக்க வருகிற பக்தர்கள் உன்னையும் வணங்கிச் செல்வர். என்னை முதல் முறையாய் தரிசிப்பதற்கென்று வரும் பக்தர்கள் (கன்னி ஐயப்பன்) என்று வாராது இருக்கின்றானோ அன்று நான் உன்னை மணந்து கொள்வேன்" என்றார்.

அதாவது "என்னைத் தரிசிப்பதற்குரிய நாள்களில் என்றாவது கன்னியாத்திரை செய்யும் பக்தர்கள் (கன்னிச்சாமி) வராமல் இருக்கிறானோ அன்றைக்கு உன்னை மணந்து கொள்வேன்" என்றார்.

(மஞ்சமாதாவே இன்று மாளிகைபுரத்து அம்மனாய் அறியப்படுகிறாள். சபரிமலை பதினெட்டாம் படியில் மஞ்சமாதாவிற்கென்று ஓர் ஆலயம் இருப்பதைக் காணமுடியும். அக்கோயிலின் கதவுகள் ஒருபோதும் திறக்கப்படுவதில்லை.)

பந்தள ராஜன் இராஜசேகரன் மணிகண்டனுக்கு கோயில் கட்டும் திருப்பணியைத் தொடங்கினான். பம்பா நதியில் நீராடி, விநாயக பூஜை நடத்திய மன்னன் அப்பெருமானின் அருளைப் பெற்று அடிக்கல் நாட்டினான். திருப்பணி தொடங்கப்பட்டபோது வானம் மழை பொழிந்தது. ஐயப்பனின் திருத்தோற்றம், யோகப்பட்டம் அணிந்த மூட்டுக்களுடனும், சின்முத்திரையுடனும் கூடிய வலத்திருக்கை யுடனும், அபயஹஸ்தம் அளிக்கும் இடது திருக்கையுடனும் ஒன்றாய்ப் பொருந்தி விளங்கும். தாமரைப் பாதங்களும், யோகாசனத்துடன் கூடிய தவநிலையில் ஐயப்பன் விக்கிரகம் ஒரு மகர சங்கராந்தி தினத்தன்று பஞ்சமி உத்திரம் கூடிய சுப முகூர்த்தத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டது. தர்மசாஸ்தா மெய்யப்பனாகி பதினெட்டாம்படி கோயிலுக்குள் அமர்ந்து விண்ணையும், மண்ணையும் காக்கும் தமது பரிபாலனத்தைத் தொடங்கினார். தொடர்ந்து மாளிகைப்புறத்தம்மன், வாபரன், கடுத்த சுவாமி, விநாயகர், யசி, நாகர் திருவிக்கிரகங்களும் பிரதிஷ்டை செய்யப்பட்டன.

சபரிமலை நடைபயணம் தொடக்க முனையான எருமேலி என்ற திருத்தலத்திலிருந்து வனப்பிரதேசம் ஆரம்பமாகிறது. மலைகளும் காடுகளும் நிறைந்த கரடுமுரடான பாதை. நடப்பது சிரமம். ஐயப்பனின் பிரதான துணைவன் வாபரன். வாபரனுடைய கோயில் எருமேலி கோட்டத்தில் உள்ளது. சபரிமலைச் செல்லும் காட்டுவழியில் ஏழு கோட்டைகள் உள்ளன.

முதலாவது கோட்டை எருமேலி. இங்கு ஓர் ஐயப்பன் கோயில் உள்ளது. இக்கோயிலுக்குச் சற்று தொலைவில் எருமேலிப்பேட்டை என்ற இடம் உண்டு. அங்குள்ள வாபர் கோயில் மார்கழி மாத பேட்டைத் துள்ளல் என்ற விழா நடக்கும் பேட்டையில் இருந்து எருமேலி வருவது சுவாமி வேட்டை முடித்து வருவதான ஐதீகம். அங்கிருந்து ஐந்து கிலோமீட்டர் தொலைவிலுள்ள பெரும்தோடு இருக்கிறது. இங்கு நதியில் நீராடி இளைப்பாறலாம். ஐயப்பன் இந்த இடத்தில் பூதகணத்தவர்களுடன் தங்கி இளைப்பாறியதாய் நம்பப் படுகிறது.

அடுத்துச் செல்கிற இடம் காளை கட்டு. இது இரண்டாவது கோட்டை எருமேலியிலிருந்து ஒன்பது கி.மீ. இங்கு நந்திப்பெருமான் தேவனாக

விளங்குகிறார். மஹிஷி அரக்கியை ஐயப்ப சாமி வதம் செய்து ஆனந்த தாண்டவம் ஆடிய இடம் இது. அரக்கியை அழித்து ஆனந்த தாண்டிவம் ஆடிய காட்சியை நந்திகேஸ்வரர் தரிசித்ததால் "காளைக்கட்டி" என்ற அத்தலம் பெயர் பெற்றது.

மூன்றாவது உடும்பறைக் கோட்டை. இங்கே பூதநாதர் வியாக்ர பாதன் என்ற பெயரில் குடிகொண்டுள்ளார். இந்த இடத்தில் ஐயப்பனோடு அவருடைய பூதகணங்களுக்கும் பூஜைகள் நடக்கிறது. நான்காவது கோட்டை கரிமலை. இங்கு கரிமலை பகவதியும், கொச்சுக்கடுத்த சுவாமியும் கோயில் கொண்டுள்ளார்கள். கரிமலை ஏற்றம் சிரமமானது. ஐந்தாவது கோட்டை சபரிபீடம். இதனை அடைவதற்கு முன் நீலிமலையைக் கடக்கவேண்டும். பக்தர்கள் மலர் முதலியன கொண்டு நீலிமலையை பூஜித்தபின் மலை ஏறுவர். ஆறாவது கோட்டை சரங்குத்தி. இங்கு அஸ்திர பைரவன் என்ற தேவன் வாசம் செய்வதாக நம்பப்படுகிறது. ஏழாவது கோட்டை சுவாமி ஐயப்பனின் சந்நிதானமாகிய பதினெட்டாம் படியாகும். படியின் வலதுபுறம் கருப்பசாமியும், இடதுபுறம் கடுத்த சுவாமியும் வீற்றிருக்கிறார்கள். தர்மசாஸ்தாவான மூல ஸ்தானத்தில் கன்னி மூலையில் மகா கணபதி, வாயு மூலையில் மாளிகை புறத்தம்மனும் வடக்குப்பக்கத்தில் வாபர சுவாமியும் பரிவார தேவதைகளாய் விளங்குகிறார்கள்.

ஐயப்பமார்கள் தலையில் இருமுடிக்கட்டுடன் சரணம் சொல்லிக் கொண்டே படி ஏறுகிறார்கள். அந்தச் சரணம் தான் அவர்களைப் பதினெட்டு படிகளையும் கடக்க உதவுகிறது. மணிகண்டன் தமது திருக்கையில் தாங்கியிருந்த பதினெட்டு ஆயுதங்களே பதினெட்டு படிகள் என்றோர் ஐதீகம். ஐந்து இந்திரீயங்கள், எட்டு ராகங்கள், மூன்று குணங்கள், வித்தை, அவித்தை ஆகியவைகள் குறிக்கப்படுவது உட்பொருளாய் உள்ளது. திருக்கோயில் பகவான் யோகாசன நிலையில் "தத்வமஸி" என்ற சின்மய முத்திரை காட்டி அமர்ந்து இருக்கிறார்.

## மனித வாழ்க்கை

உலகில் மதிப்பு மிக்கது மனித வாழ்க்கை தான். மனித வாழ்க்கையை ஐந்து பருவங்களாக பிரித்துள்ளார்கள் நமது முன்னோர்கள். அந்த ஐந்து பருவங் களையும் விளக்கும் வகையில் ஐயப்பனின் அவதாரங்கள் அமைந்திருக்கின்றன.

பிறந்தது முதல் பதினெட்டு வயது வரை 'பால்ய பருவம்'. இந்த பருவத்தை விளக்கும் அவதாரத்தை கூறும் திருத்தலம் குளத்துப்புழா. பத்தொன்பது முதல் முப்பத்தைந்து வயது வரை உள்ள பருவம் யௌவன பருவம். இந்தப் பருவத்தை விளக்கும் தலம், ஆரியங்காவு. முப்பத்தாறு வயது முதல் ஐம்பத்தைந்து வயது வரை கிரஹஸ்த பருவம் - அச்சன்கோயில். ஐம்பத்தொரு வயது முதல் எண்பத்தைந்து வயது வரை வானப்ரஸ்தம் - சபரிமலை. எண்பத்தாறு வயது முதல் ஏகாந்த நிலை - காந்தமலை

## சபரிபீடம்

சபரிபீடம் என்று அழைக்கப்படும் ஓர் சமதளம். இங்குதான் சபரி என்னும் பக்தை தவம் செய்து விண்ணுலகம் அடைந்ததாக புராணங்கள் கூறுகின்றன. இங்கு தேங்காய் உடைத்து, கற்பூரம் ஏற்றி, (பலர் சபரி பீடம் தான் சபரிமலை என்று எண்ணிக் கொண்டுள்ளார்கள், சபரி எனும் பெண் இராமபிரானை எண்ணி தவம் இருக்கிறாள். இராமன் சபரியின் தவத்தினைக் கண்டு மனம் குளிர்ந்து இந்த ஜென்மத்தில் உனக்கு மோட்சமில்லை. அடுத்த ஜன்மத்தில் உனக்கு பிறவாமை அளிக்கிறேன் என்கிறார். அதன்படி இங்கு வந்து தவமிருக்க, இராமன் வனவாசத்தில் இங்கு வந்து மோட்சமளிக்கிறார். அதனால் இது சபரிமலை என பெயர் பெற்றது)

## சரங்குத்தி

இது கன்னி ஐயப்பன்மார்களுக்கு ஒரு புனிதமான இடமாகும். சபரிமலைக்கு புனிதயாத்திரை வரும் கன்னி ஐயப்பன்மார் தங்களை இருமுடிக்கட்டில் ஓர் அம்பினை செருகியெடுத்து வருகின்றனர். அதை சரங்குத்தியில் சொருகிய பின்பே புனிதமான படிகளில் ஏறும் தகுதி பெறுகின்றனர். கடைசியில் சுவாமி ஐயப்பனின் புனித சந்நிதானம் சென்றடையலாம்.

## பதினெட்டு படிகள்

சபரிமலையில் மிகச் சிறப்பான ஓர் அம்சம் 18 படிகள்தான். மிகவும் புனிதமானவை. பகவத்கீதையின் அத்தியாயங்கள் 18; சித்திகள் 18; புராணங்கள் 18; இவை தவிர லிங்கசரீரம் 18 தத்துவங்களுடன கூடியது. இந்தத் திருப்படிகளில் குருதேவர் வசிப்பதாக ஐதீகம். மாலை அணிந்து, விரதம் இருந்து, நியமம் அனுஷ்டித்து, இரு முடியுடன், பக்தியுடன் வருபவர்கள் இந்த 18 படிகள் வழியே வர அனுமதிக்கப் படுவார்கள். மற்றபடி ஐயப்பனின் தந்தையான பந்தளராஜனின் வாரிசுகளுக்கு மட்டுமே அனுமதி.

மஞ்சமாதாவே மாளிகை புறத்து அம்மனாய் இருக்கிறாள். சபரி மலை பதினெட்டாம்படியில் மஞ்சமாதாவிற்கென்று ஓர் ஆலயம் இருக்கிறது. அக்கோயிலின் கதவுகள் ஒருபோதும் திறக்கப்படுவ தில்லை. பதினெட்டுப்படிகளின் இருபுறமும் உள்ள கருத்த சுவாமி, கருப்பசுவாமி முதலிய மூர்த்திகளை வணங்கி விட்டு வழியில் அனுபவித்த துன்பங்களை எல்லாம் மறந்து, தேங்காய் உடைத்து, சரண கோஷத்துடன் மெல்ல ஏறி பின் கோயிலை வலம் வந்து ஹரிஹர புத்ரனாகிய தர்மசாஸ்தாவாகிய ஐயப்பனை தரிசிக்கலாம்.

ஐயப்பன் ஆலயம் சிறியதாக இருந்தது. மூலஸ்தானத்தில் ஐயப்பன் பொன் நிறத்தில் வீற்றிருந்தார். கேரள மாநிலத்தில் கோயில்கள் தமிழகத்தைப் போல இருந்ததில்லை. அவற்றின் அமைப்பு முற்றிலும் மாறுபட்டது. ஓட்டுக் கட்டடங்களில் வீடுகள் போன்றே கோயில்கள் இருக்கும். கோயில்களின் அமைப்பு

மட்டுமல்ல அங்கு பூஜை முறை களும் வித்தியாசமானவை. தமிழகத்தில் கன்னியாகுமரி மாவட்டம் நீங்கலாக அனைத்து மாவட்ட கோயில்களிலும் கருவறைக்குள் எந்த பூசாரி வேண்டுமானாலும் சென்று பூஜை செய்யலாம். ஆனால் கேரளாவில் மேல்சாந்தி எனப்படும் தலைமை பூசாரிக்கே கருவறைக்குச் செல்லும் உரிமை உண்டு.

ஆனால் சபரிமலை கோயிலில் இந்த விதிமுறையுடன் பூசாரியை தேர்ந்தெடுப்பதே வித்தியாசமாக இருக்கும். அதே நேரம் பெரும் யோகம் உள்ளவரும், பாக்கியசாலியாக இருப்பவருமே இந்த பொறுப்பிற்கு வரமுடியும். இவ்வாறு தேர்ந்தெடுக்கப்படும் பூசாரிக்கும் சில நிபந்தனைகள் விதிக்கப்படும். அதாவது ஒரு ஆண்டு காலமும் பூசாரி சபரிமலையிலேயே தங்கியிருக்க வேண்டும். அவரது வீட்டில் எந்த சுக துக்கமானாலும் வீட்டிற்கு போகக்கூடாது. ஐயப்பனின் சேவைக்கே தன்னை அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும்.

சபரிமலையில் சுவாமி ஐயப்பன் தியான கவன நிலையில், குத்துக்காலிட்ட ஆசனத்தில் அமர்ந்துள்ளார்.

## ஐயப்பனின் திருத்தோற்றம்

யோகப்பட்டம் அணிந்த மூட்டுக்களுடனும் சின்முத்திரையுடனும் கூடிய வலத்திருக்கையுடனும், அபயஹஸ்தம் அளிக்கும் இடது திருக்கையுடனும், ஒன்றாய் பொருந்தி விளங்கும் தாமரைப் பாதங்களும், யோகாசனத்துடன் கூடிய தவநிலையில் ஐயப்பன் விக்ரகம் உள்ளது.

ஒரு மகர சங்கராந்தி தினத்தன்று பஞ்சமி உத்திரம் கூடிய சுப முகூர்த்தத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டது. தர்மசாஸ்தா மெய்யப்ப னாகி பதினெட்டாம்படிக் கோயிலுள் அமர்ந்து விண்ணையும், மண்ணை யும் காக்கும் தனது பரிபாலனத்தைத் தொடங்கினார். தொடர்ந்து மாளிகைபுறத்தத்தம்மன், வாபரன், கடுத்த சுவாமி, விநாயகர், யசி, நாகர் திருவிக்கிரகங்களும் பிரதிஷ்டை செய்யப்பட்டன.

சபரிமலையில் சுவாமி ஐயப்பன் தவமிருந்தபோது தனது வஸ்திரத்தை முழங்காலைச் சுற்றி கட்டிக்கொண்டு அமர்ந்தார். தியானத்தில் இருக்கும்போது தன்னை வளர்த்த தந்தை வந்தால் கூட தியானத்திலிருந்து எழக்கூடாது என்ற நோக்கத்திலேயே எழாத நிலையில் குத்துக்காலிட்டு அமர்ந்துள்ளார் என்று சொல்வதுண்டு. அவர், கால்களை தன் முதுகு தண்டெலும்பின் கீழ்பகுதியுடன் சேர்த்துக் கட்டி, ஆசனப்பகுதியும், இரண்டு பாதங்களும் கீழே தரையில் படும்படி குத்துக்காலிட்டு அமர்ந்துள்ளார். மன அமைதி, தெளிந்த சிந்தனை, எதையும் சாதிக்கும் மன ஆற்றல், அஷ்டமாசித்தி ஆகியவற்றை இந்த ஆசனம் தரும்.

# சபரிமலையின் 18 படிகளும் 18 விதிமுறைகளும்

ஸ்வாமி தயானந்த சரஸ்வதியின் மிகச்சிறந்த சீடரான சுவாமி பரமார்த்தானந்தா 18 படிகளுக்கும் 18 விதிமுறைகளை விளக்கி நாம் எப்படி மோட்சத்தை அடையலாம் என்று வழிகாட்டுகிறார்.

**1ம் படி அஹிம்சை :** உடலாலோ, வாக்காலோ அல்லது மனதள-விலோ கூட பிறரை காயப்படுத்தாமல் இருக்க வேண்டும் என்பது அஹிம்சை.

**2ம் படி வாய்மை :** பொய் சொல்லாமல் இருக்க வேண்டும். நேர்மையாக நடக்க வேண்டும் இது வாய்மை.

**3ம் படி திருடாமை :** பிறர் பொருளை அபகரிப்பது மட்டும் திருட்டு அல்ல. பிறருக்கு நியாயமாக சேர வேண்டியதை, தர வேண்டியதை கொடுக்காமல் இருப்பதும் குறைத்துக் கொடுப்பதும் கூட திருட்டே ஆகும்.

**4ம் படி ப்ரஹ்மசர்யம் :** குடும்பஸ்தராக இருந்த போதிலும் இந்த விரத நாட்களில் ப்ரஹ்மசர்யத்தை கடைபிடிக்க வேண்டும்.

**5ம் படி பிறர் பொருள் விரும்பாமை :** நமக்கு சேர வேண்டியது அல்லாத, இலவசமாக பிறர் கொடுக்கும் எதையும் பெற்றுக் கொள்ளாமல் இருக்க வேண்டும்.

**6ம் படி சுத்தம் :** உடலும், உள்ளமும் தூய்மையாக இருக்க வேண்டும். உடல் தூய்மைக்கு 2 வேளை குளிக்க வேண்டும். உள்ளத் தூய்மைக்கு பூஜை, இறைவனை போற்றுதல் போன்றவற்றை தவறாமல் செய்ய வேண்டும்.

**7ம் படி மனநிறைவு :** நம்மிடம் இருப்பதில் திருப்தி அடைவது, அத்யாவசிய பொருள்களை தவிர மற்றவற்றை நாடாமல் இருப்பது.

**8ம் படி தவம் :** உணவு விரதங்கள், செருப்பு போடாமல் இருத்தல் போன்ற நியமங்களை முழு ஈடுபாட்டுடன் கடைபிடிக்க வேண்டும்.

**9ம் படி சாஸ்திரம் படித்தல் :** வேதங்கள், பகவத்கீதை, பாகவதம், இராமாயணம், மகாபாரதம், ஐயப்ப சரிதம், தேவாரம், திருவாசகம் போன்ற சாஸ்திரங்களை (எந்த மொழியிலும்) தினமும் படிக்க வேண்டும்.

**10ம் படி அடைக்கலம் :** பொருள் மற்றும் உறவுகளை விட பகவானையே சகலமும் என சரணடைய வேண்டும்.

**11ம் படி தியானத்தில் அமர்தல் :** சுத்தமான இடத்தில் நேராக, ஸ்திரமாக, சுகமாக அமர்ந்துக் கொள்ள வேண்டும்.

**12ம் படி சுவாசப்பயிற்சி :** 12 முறை மூச்சை ஆழமாக உள்ளிழுத்து வெளியே விடவேண்டும்.

**13ம் படி புலனடக்கம் :** ஐம்புலன்களை உலக விஷயங்களின்பால் செலுத்தாமல் இருக்க வேண்டும்.

**14ம் படி இறைவனுடன் ஒன்றுதல் :** அலைபாயும் மனதை இறைவனிடம் மட்டுமே செலுத்துதல்.

**15ம் படி த்யானம் :** இறைவனின்பால் செலுத்திய மனதை தொடர்ந்து அதே நிலையில் வைத்திருத்தல்.

**16ம் படி சமாதி நிலை :** இறைச்சிந்தனையை தவிர வேறெதுவுமற்ற நிலையில் ஆழ்ந்து இருத்தல்.

**17ம் படி பாபத்தை துறத்தல்**

**18ம் புண்ணியத்தை துறத்தல்**

மேலே சொன்னவற்றில் 18 படிகளை கடப்பது நம் முயற்சியில் உள்ளது. 16 படிகளை சிரத்தையுடன் கடந்தால் 17-18 படிகளை கடக்க ஐயப்பனே நம் கைபிடித்து அழைத்துச் செல்வார்.

நெய் அபிஷேகம் இறைவனுடன் நமது ஐக்கியத்தை விளக்கும். சபரிமலை ஐயப்பனே ஆதிகுரு - தர்ம சாஸ்தா என்றால் - சாஸ்திரத்தை கற்பிக்கும் குரு - குருவான அவரே ஸ்வாமியாகவும் இருப்பதால் நம் எல்லோருக்கும் குரு ஸ்வாமியாக இருக்கிறார். சரி ஏன் இந்த விரதத்தை குறிப்பிட்ட 48/60 நாட்களில் மேற்கொள்ள வேண்டும். பரீட்சார்த்தமாக இந்த காலகட்டத்தில் நாம் முயற்சி செய்து வெற்றி பெறுவதால், பிறகு அதை ஆண்டு முழுவதற்கும் நீட்டிக்கலாம். பிறகு வாழ்நாள் முழுவதும் அதை கடைபிடித்து இந்த வாழ்வில் முழுமை பெறலாம்.

ஐயப்பன் காட்டும் சின் முத்திரையில், கட்டைவிரல் பரமாத்மாவை குறிக்கிறது. ஆள்காட்டி விரல் ஜீவாத்மாவை குறிக்கிறது. கட்டை விரலும் ஆள்காட்டி விரலும் சேரும்போது வாழ்க்கை பூரணமடைகிறது. இந்த ஜீவ, பிரம்ம ஐக்கியத்தைக் குறிப்பது சின் முத்ரா. அதுவே நாம் பதினெட்டு படி களையும் கடந்தவுடன் காணும் "தத்துவமஸி" (அதுவே நீயாக இருக்கிறாய்).

# பஜனைப் பாடல்கள்

## காத்து இரட்சிக்கனும் கன்னிமார்களை

காத்து இரட்சிக்கனும் கன்னிமார்களை
கன்னிமூல கணபதியே நி
பார்த்து இரட்சிக்கனும் பரிவு காட்டனும்
கன்னிமூல கணபதியே
காத்து இரட்சிக்கனும் கருணை காட்டனும்
பொன்னு பகவதயே அம்மா பொன்னு பகவதியே

மாளிகை புறத்து மஞ்சம்மா
மாணிக்க பாதம் தஞ்சம் அம்மா
நெய் மணக்குது மெய்மிருக்குது சபரிமலையிலே
அய்யனே உந்தன் அழகைக் கண்டால்
பக்தி பிறக்குது உள்ளத்திலே ஞான சக்தி பிறக்குது

நெய்யபிஷேகம் செய்யும்போது உள்ளத்திலே
மெய் சிலிர்க்குது மலையிலே
தையினில உந்தன் சந்நதிகாண
உள்ளத்தில் ஆவல் பொங்கிடுதே
சத்தியமான பொன்னு பதினெட்டு படி பகவானே
சுவாமி பொன்னு பகவானே அய்யா பொன்னு பகவானே

ஷண்முகன் தம்பியே உந்தன் தரிசனம் கிடைக்கவேணுமே
ஸ்வாமியே சரணம் ஐயப்பா
என்று சொல்லி நாங்கள் வந்தோமே
சங்கர மோகினி பாலனே உந்தன்
தரிசனம் தனைக்காண தயை புரிவாய் தேவனே
தயை புரிவாய் தேவியே
ஸ்வாமியே சரணம் ஐயப்பா ஐயப்ப சரணம் ஐயப்பா

## வன்புவி மேல் ஏறிவரும் எங்கள்

வன்புலி மேல் ஏறிவரும் எங்கள்
வீரமணி கண்டனே வா உந்தன்
வீர விளையாடல்களைப் பாட வாணி
தடை போடவில்லை!

கொஞ்சிக் கொஞ்சிப் பேசும் மொழி
பிஞ்சுமுகம் பார்க்கலையே ஐயப்பா அந்த
பந்தளத்தான் செய்த தவம்
இந்த பாமரன்யான் செய்யவில்லையோ!

அம்பும் வில்லும் கையில் எதற்கோ அந்த
வாபரனை வெற்றி கொள்ளவோ ஐயப்பா
உந்தன் பக்தர்களின் குறைகளெல்லாம்
நீயும் வேட்டையாடி விரட்டிடவோ!

பாலெடுக்க புலி எதற்கோ உந்தன்
பார்வைதான் சக்தியற்றதோ ஐயப்பா
உந்தன் பார்வை ஒன்று போதுமய்யா
அருள் பால்பொழிய வேண்டுமய்யா!

கற்பூரப் பிரியனின் பார்வை எங்களை ஒரு
காந்தம்போல் இழுக்குதய்யா ஐயப்பா
கதிரேசன் தம்பியே கண்கண்ட தெய்வமே
கதாதரன் மகனே உன்னைக் காண அருள் செய்வாய் ஐயப்பா!

## பவனி வர்றார் இங்கே சாமி சரணம் ஐயப்பா

பவனி வர்றார் இங்கே சாமி சரணம் ஐயப்பா
வாவர் சாமி கூட வர்றார் சாமி ஐயப்பா

பவனி வர்றார் இங்கே சாமி சரணம் ஐயப்பா
வாவர் சாமி கூட வர்றார் சாமி ஐயப்பா
சரணம் ஐயப்பா சுவாமி சரணம் ஐயப்பா
சரணம் ஐயப்பா சுவாமி சரணம் ஐயப்பா (பவனி வர்றார் இங்கே)

காவலர்கள் கூட வர்றார் சரணம் ஐயப்பா
ஆவலோடு கும்பிடுவோம் சாமி ஐயப்பா
காவலர்கள் கூட வர்றார் சரணம் ஐயப்பா
ஆவலோடு கும்பிடுவோம் சரணம் ஐயப்பா

சரணம் ஐயப்பா சுவாமி சரணம் ஐயப்பா
சரணம் ஐயப்பா சுவாமி சரணம் ஐயப்பா
சரணம் ஐயப்பா சுவாமி சரணம் ஐயப்பா
சரணம் ஐயப்பா சுவாமி சரணம் ஐயப்பா

அம்பு வில்லும் கையிலேந்தி சுவாமி வருகிறார்
எம்பெருமான் துள்ளி துள்ளி ஆடி வருகிறார்
துன்பமெல்லாம் தீர்த்திடவே ப்வனி வருகிறார்
இன்பமோடு கும்பிடுவோம் சரணம் ஐயப்பா (பவனி வர்றார் இங்கே)

தந்தை தாயுமான சுவாமி பவனி வருகிறார்
வேதியர் சபை நடுவே சுவாமி வருகிறார்
பூதப்படைகளுடன் ஐயன் வருகிறார்
இத்தருணம் காத்திடுவார் சரணம் ஐயப்பா (பவனி வர்றார் இங்கே)

கடகடவென பீறி முழங்க சுவாமி வருகிறார்
கொட்டு வாத்தியம் முழங்கி வரவே ஐயன் வருகிறார்
கடகடவென பீறி முழங்க சுவாமி வருகிறார்
கொட்டு வாத்தியம் முழங்கி வரவே ஐயன் வருகிறார்
மாடன் சடையன் பொருளன் இருளன் சரணம் ஐயப்பா
ஓடி வரவே பவனி வர்றார் சரணம் ஐயப்பா (பவனி வர்றார் இங்கே)

மின்னல் போல ஒளி விளங்க சரணம் ஐயப்பா
பொன்னு மேனி கண்டிடவே சரணம் ஐயப்பா
மின்னல் போல ஒளி விளங்க சரணம் ஐயப்பா
பொன்னு மேனி கண்டிடவே சரணம் ஐயப்பா
தனிச்சிலம்பு சல்லடையும் சுவாமி ஐயப்பா
கலகலவென சலங்கை குலுங்க பவனி வருகிறார் (பவனி வர்றார் இங்கே)

கடும் பிணியின் கொடுமையினால் வருந்தும் பக்தரை
நொடிப்பொழுதில் பிணி அகற்றி காத்தருள் ஐயா
கடும் பிணியின் கொடுமையினால் வருந்தும் பக்தரை
நொடிப்பொழுதில் பிணி அகற்றி காத்தருள் ஐயா

சரணம் ஐயப்பா சுவாமி சரணம் ஐயப்பா
ஹரிஹர சுதன் அகில வரதன் அபயம் ஐயப்பா
சரணம் ஐயப்பா சுவாமி சரணம் ஐயப்பா
ஹரிஹர சுதன் அகில வரதன் அபயம் ஐயப்பா

சரணம் ஐயப்பா சுவாமி சரணம் ஐயப்பா
ஹரிஹர சுதன் அகில வரதன் அபயம் ஐயப்பா

## எங்கே மணக்குது சந்தனம் எங்கே மணக்குது

எங்கே மணக்குது சந்தனம் எங்கே மணக்குது
ஐயப்ப சுவாமி கோவிலிலே சந்தனம் மணக்குது
என்ன மணக்குது மலையில் என்ன மணக்குது
இன்பமான ஊதுபத்தி அங்கே மணக்குது (எங்கே மணக்குது)

எங்கே மணக்குது நெய்யும் எங்கே மணக்குது
வீரமணிகண்டன் சன்னதியிலே நெய்யும் மணக்குது
திருநீறும் மணக்குது பன்னீரும் மணக்குது
ஆண்டவனின் சன்னதியிலே அருளும் மணக்குது
ஐயப்பன்மார்கள் உள்ளத்திலே அன்பு மணக்குது (எங்கே மணக்குது)

பள்ளிக்கட்டைச் சுமந்துகிட்டா பக்தி பிறக்குது
அந்தப் பனிமலையில் ஏறிடவே சக்தி பிறக்குது
பகவானைப் பார்த்துவிட்டா பாவம் பறக்குது
பதினெட்டாம் படிதொட்டால் வாழ்வும் இனிக்குது (எங்கே மணக்குது)

பேட்டைத் துள்ளி ஆடும்போது மனமும் துள்ளுது
ஐயன் பேரழகைக் காண உள்ளம் ஆசை கொள்ளுது
காட்டுக்குள்ளே சரணகோஷம் வானைப் பிளக்குது
வீட்டை மறந்து பக்தர் கூட்டம் காட்டிலிருக்குது (எங்கே மணக்குது)

பூங்காவனத் தோப்புக்குள்ளே பவனி வருகிறான்
வேங்கையின் மேல் ஏறிவந்து வரமும் கொடுக்கிறான்
நோன்பிருந்து வருவோரைத் தாங்கி நிற்கிறான்
ஓங்கார நாதத்திலே எழுந்து வருகிறான் (எங்கே மணக்குது)

## அன்னதான பிரபுவே சரணம் ஐயப்பா

அன்னதான பிரபுவே சரணம் ஐயப்பா
ஆரியங்காவில் ஐயனே சரணம் ஐயப்பா
பொன்னடியைப் போற்றுகின்றோம் சரணம் ஐயப்பா
கண்ணனின் மைந்தனே சரணம் பொன்னய்யப்பா

வன்புலிமேல் அமர்ந்தவனே சரணம் பொன்னய்யப்பா
வாவர்சுவாமி தோழனே சரணம் பொன்னய்யப்பா
இன்னல் யாவும் தீர்ப்பவனே சரணம் பொன்னய்யப்பா
பந்தளனின் செல்வனே சரணம் பொன்னய்யப்பா

எருமேலி சாஸ்தாவே சரணம் பொன்னய்யப்பா
ஏழை பங்காளனே சரணம் பொன்னய்யப்பா
அறிந்தும் அறியாமலும் செய்த பிழை தன்னை
பொறுத்தருள்வாய் நீ சரணம் ஐயப்பா

சரணம் ஐயப்பா சுவாமி சரணம் ஐயப்பா
சரணம் ஐயப்பா சுவாமி சரணம் ஐயப்பா

# FIRE ACCIDENT OF 1902 IN SABARIMALA



First of all the Sabarimala Ayyappan Temple prior to 1902 needs to be understood in some detail. Prior to 1902, the temple according to old timers was something like this. There was the ponnu pathinettampadi made of stone and beyond it was the Sreekovil of Ayyappaswamy in full splendor. There was no flagmast or shrines to Kannimoola Ganapathy or Nagaraja in the Thirumuttom roughly translated in malayalam as holy compound where the Srikovil stood. The sankalpam of Kannimoola Ganapathy and Nagaraja could have been there. Anyway the Ganapathy and Nagaraja shrines did not physically exist. As far as Ayyappaswamy's Sreekovil or sanctum santorum was concerned the walls of the sanctum were made of stone or mortar but the roof was thatched. In those days the temple opened for Makaravilaku only around the 10th of January just before the famous Erumeli petta. Two to three days before the temple designated Bhaktas from Ranni Perunad used to come to Sannidhanam through Laha-Mathangamala route, the route taken by the Thiruvabharanam bearers and reach

Sannidhanam with adequate stock fresh thatch leaves and used to fully set the Srikovil ready for Makaravilaku deeparadhana and festivities till the shrine closed after Guruthi. On that fateful Makara vilakku day of 1902 swamis burned camphor on the thripadi (steps) leading to the Srikovil once the Thiruvabharanam was taken inside.

Unfortunately or rather due to the will of Ayyappaswamy the aggressive burning of camphor on the thripadi acted as a contributing factor and the fire quickly spread to the roof. The vigilant Melshanti did not adorn the idol with the Thiruvabharanam and quickly locked the box and passed it out of the srikovil in no time. Due to Swami's grace the Thiruvabharanam was saved in the nick of time. Swami bhaktas started running helter skelter in the ravaging fire. Meanwhile the Melshanti hugged the idol and tried to pull it off the peetam. Even after 2 to 3 attempts the idol did not budge as it was firmly fixed by ashtabandham.

Miraculously just before the burning roof fell on the idol and Melshanti, the idol came off and carrying the heavy idol hitherto

impossible by a single person and possibly in a trance the Melshanti and the idol quickly melted into the darkness. All the other priests inside the Srikovil had jumped out earlier. Nobody knew what happened later as it was pich dark with confused bhaktas running here and there. The next morning when a swami bhakta went to bathe in the Bhasmakulam, he found something protruding out of the water. When the other Bhaktas were informed and when they searched the water they were astonished to find the Melshanti clinging to the idol and, in a swoon, and, miraculously alive. The Punapratishta of this idol was done by Kandararu Prabhakararu in 1904. This holy idol was destroyed in 1950.

Swamieya Saranam Ayyappa.

---

## சபரிமலைப் பற்றி இன்றைய தலைமுறை அறிய

உலகமே போற்றும் உன்னதக் கோவிலாம் சபரிமலையின் பெருமையை பற்றி புதிதாக விளக்க வேண்டிய அவசியமில்லை... ஆனால் சுமார் 60 ஆண்டுகளுக்கு முன் சபரிமலையில் நடைபெற்ற ஒரு முக்கியமான சம்பவத்தை இன்றைய தலைமுறையினர் அறிந்திருக்க மாட்டார்கள்.

அன்றைய திருவிதாங்கூர் மாநிலம் (எனப்படும் Travancore State) கேரளத்தில், கேரள மாநிலம் மட்டுமல்லாது உலகெங்குமுள்ள ஹிந்து சமுதாயமே மனம் கொந்தளித்து நிற்குமளவுக்கு ஒரு சம்பவம் நடைபெற்றது.

ஆம்! பக்தர்கள் நினைத்தாலே பரவசத்தை கொடுக்கும் சபரிமலை யின் ஆலயம் முற்றிலும் தீக்கிரையாக்கப்பட்டு தரைமட்டமாக்கப் பட்டிருந்தது. கோவில் மூலஸ்தான கதவுகள் உடைத்து நொறுக்கப் பட்டிருந்தது. ஆலயக் கூரையும், ப்ரகாரமும் மரத்தால் செய்யப்பட்டவை ஆதலால் அவை கரிக்கட்டைகளாகவும், சாம்பற் குவியல்களாகவுமே எங்கும் சிதறிக் கிடந்தது. உள்ளே ... ஐயப்பனின் திருமேனி (முன்பு ஆலயத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்தது) துண்டு துண்டுகளாக நொறுக்கப்பட்டு எங்கும் சிதறிக் கிடந்தது.

காட்டுத்தீயினால் உண்டான விபத்து என்று அனைவரும் நினைத்திருந்த நிலையில், காவல்துறை தன் விசாரணையை துவங்கியதும் அவர்கள் கண்டறிந்த உண்மை... எரிந்து போயிருந்த

ஆலயத்தில் கிடைத்த நெய்யில் நனைக்கப்பட்ட தீப்பந்தங்களும், ஆலயக்கதவுகளில் காணப்பட்ட கோடாலி அடையாளங்களும்... இது விபத்தல்ல என்று திட்டவட்டமாக உறுதி செய்தது.

ஐயப்பன் எனும் தெய்வத்தை நாடி ஆண்டுக்கு ஆண்டு பக்தர் கூட்டம் அதிகரித்து வருவதை சிலர் விரும்பவில்லை. சாதிமத வித்தியாச மில்லாமல் எல்லா மதத்தவரும் சபரிமலைக்கு வருவதை பொறுக்க முடியாமல் சபரிமலை கோவிலையே அழித்துவிட்டால் அத்துடன் அங்கு வரும் பக்தர் கூட்டமும், ஐயப்ப பக்தியும் அழிந்துவிடும் என்று எண்ணி இந்த சதிச்செயல் அரங்கேறி இருப்பது தெரிய வந்தது.

பரசுராமரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட விக்கிரகத் திருமேனி அது. பின்னமடைந்த விக்கிரகம் கொண்டு பூஜிக்கவோ, தரிசிக்கவோ கூடாது என்கிறது ஆகம சாஸ்திரம்.

நவாப் ராஜமாணிக்கம் பிள்ளை, மிகப்பெரிய நாடகக் கம்பெனி வைத்திருந்தார். நவாப் ராஜமாணிக்கம் பிள்ளை, தீவிரமான ஐயப்ப பக்தர். அவர், எங்கெல்லாம் நாடகம் போடுகிறாரோ அங்கெல்லாம் ஐயப்ப சுவாமியின் படத்தை வைத்து, பூஜை போட்ட பிறகே நாடகத்தைத் தொடங்குவார். இப்படி ஊர் ஊராகச் சென்று, நாடகம் போடுகிற வேளையில், தமிழக மக்களுக்குள் ஐயப்ப பக்தியை அவர்தான் கொண்டு வந்தார்.

மதுரை பி.டி. ராஜனும், நவாப் ராஜமாணிக்கமும் சேர்ந்து ஐயப்ப விக்கிரகத்தைச் செய்து முடித்திருந்தார்கள். அதே போல், பாலக்காடு சாமி அண்ணாவும் விக்கிரகம் செய்திருந்தார். இவர்கள் மட்டுமின்றி, கேரளத்தைச் சேர்ந்த சுவாமி விமோசனானந்தாவும் ஐயப்ப விக்கிரகம் செய்திருந்தார்.

அதையடுத்து, குடவோலை முறைப்படி, ஐயப்பன் சந்நிதியில் சீட்டுப்போட்டு பார்க்கப்பட்டது. அதில் நவாப் ராஜமாணிக்கம் பிள்ளை, பி.டி. ராஜன் பெயர்கள் வந்தன. அவர்கள் வழங்கிய விக்கிரகத்தைத் தான் இன்றைக்கும் தரிசித்துக் கொண்டிருக்கிறோம்.

சாமி அண்ணா, அவர் செய்த விக்கிரகத்தை தன்னுடைய பாலக்காட்டின் வீட்டிலேயே வைத்து பூஜித்து வந்தார். அந்த விக்கிரகம்

இன்றைக்கும் அவரின் வழித்தோன்றல்களான ஐயப்ப உபந்யாசகர் அரவிந்த் சுப்ரமண்யம் மற்றும் அவர்களின் குடும்பத்தாரால் பூஜை செய்யப்பட்டு வருகிறது.

சாமி விமோசனானந்தா செய்த விக்கிரகத்தை, காசி க்ஷேத்திரத்தில் உள்ள திலபாண்டீஸ்வரர் கோயிலில், பிரதிஷ்டை செய்தார். காசி விஸ்வநாதர் கோயிலில் இருந்து சுமார் 2 கி.மீ. தொலைவில் உள்ள திலபாண்டீஸ்வரர் கோயிலில், பதினெட்டுப் படிகளுடன் ஐயப்பன் அழகு ததும்பக் காட்சி தந்து கொண்டிருக்கிறார்.

பரசுராமர் பிரதிஷ்டை செய்த விக்கிரகம்?

சபரிமலையில், பதினெட்டுப் படிகள் ஏறியதும் ஐயப்ப சுவாமியின் சந்நிதி. இந்த சந்நிதிக்கு எதிரில், மணி மண்டபம். அதாவது, மணி இருக்கும் மண்டபம். இந்த மணி கோயில் மணி. கோயில் மணி மட்டுமா? பரசுராமரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஐயப்ப விக்கிரகம். பின்னம் அடைந்த பிறகு, அந்த விக்ரகத்தை அப்படியே மணியாக்கி, சந்நிதிக்கு எதிரே கட்டிவைக்கப்பட்டது. மணி ரூபத்தில் காட்சி தரும் மணி கண்ட சுவாமி, ஒலி ரூபமாகவும் அதாவது சப்தமாகவும் இருந்து அருள் பாலிக்கிறார். ஆக. சபரிமலையில் ஒளியாகவும் ஜோதியாகவும் திகழ்கிறான் ஐயப்பன். ஒலியாகவும் சப்தமாகவும் அருள்பாலிக்கிறான் சாஸ்தா.

அதனால் தான், கலியுகத் தெய்வம் என்று ஐயப்பனைக் கொண்டாடிப் பாடுகிறோம். பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டும் ஐயனின் திருப்பாதங்களைச் சரணமடைகிறோம்.

எந்த காரணத்துக்காக இந்த சதிச்செயல் அரங்கேற்றப்பட்டதோ, அது நிறைவேறவில்லை. தீ விபத்தினால் ஆலயத்தின் புகழ் அழிய வில்லை. மாறாக, சபரிமலையிலும் அற்புதமானதொரு புதிய விக்ரஹம் பிரதிஷ்டை செய்யப்பட்டு, ஐயனின் புகழ் முன்னிலும் பன்மடங்கு பெருகத் தொடங்கியது.

சற்றே யோசித்துப் பார்த்தால் - இந்த சதிச்செயலை ஐயன் அனுமதித்ததும் அவன் சங்கல்பமே என்றே தோன்றுகிறது. அதுவரை தென்னாட்டில் மட்டுமே பெரிதும் அறியப்பட்டிருந்த ஆலயம் இதன் பின்னர் உலக மக்களெங்கும் அறியக் காரணமானது.

# DIFFERENCE BETWEEN SASTHA AND AYYAPPA

*By* **Abhilash Rajendran**



Sastha or Shastavu or Shasta is one among the numerous names of Ayyappa worshipped at the famous Sabarimala Ayyappa Temple in Kerala. Some people believe that Sasta and Ayyappa are two different deities. This is because Sastha is mentioned to have two wives. But Ayyappa is a Brahmachari.

When the term Ayyappa is used He is always a Brahmachari. But when the term Sasta is used he can be Brahmachari or Grahasta. This is because Sastha is a very popular village deity in Kerala, Tamil Nadu and parts of Andhra Pradesh and Karnataka. The particular rural story prevalent in a particular area gives Sasta the status of Brahmachari or Grahasta (married).

The name Sasta is mentioned in the Skanda Purana. Sasta with two wives Purna and Puskala and a son is worshipped mainly as Gram Devata - village deity. Some of these earlier villages have become towns. So today there is a Sastha temple in most towns.

Ashtottara Satakam is the only scripture that mentions that Sasta has two wives. Sastha is also a subsidiary deity in many important Hindu temples in Kerala.

The murti of Ayyappa that is worshipped at Sabarimala is Yoga Murti. This is the most popular form of Ayyappa.

A popular temple dedicated to Sasta is the Achankoil Sasta Temple.



## HARIVARASANAM

Harivarasanam song is sung when doors of the Sanctum Sanctorum of the Sabarimala Ayyappa Temple is closed for the day at night. This divine song which drenches the eyes of Ayyappa devotees in tears was written Kumbakudi Kulathur Iyer. Harivarasanam lyrics were composed in 1950. Kumbakudi Kulathur Iyer used to sing it daily when the temple doors were closed after performing the Athazapuja – serving the last meal of the day to Ayyappa. Today it is known as the Urakku Pattu – or the song that sends Ayyappa to sleep.

In the beginning, the main priest used to play flute while closing the doors of the temple. Harivarasanam became the Urakku Pattu of Ayyappa after the infamous fire incident in the 50s, which burn down the old temple. When the new temple was built and the pujas commenced, Harivarasanam was inducted as the Urakku Pattu – the song to send Ayyappa to sleep.

Swami Vimochananda and Vadakatham Ishwaran Namboodiri (who was the then Melsanthi – Chief Priest) was responsible for making Harivarasanam the Urakku Pattu of Ayyappa.

Today, the Chief Priest and the other priests stand on both the sides of Ayyappa idol and recite the Harivarasanam. While singing the song one by one the priest exits the Sanctum Sanctorum without making noise. When the song is about halfway through, the Chief Priest puts off each lamp in the sanctum sanctorum. When the final line is sung, the Chief Priest closes the door of the Sanctum Sanctorum and locks it.

It is the wish of every Ayyappa devotee to present at the Sannidhanam when Harivarasanam is rendered. The emotion that it creates on devotees is unexplainable

## IMPORTANT THINGS TO DO AND REQUIRED MATERIALS FOR SRI IYYAPPAN POOJA

On the day of the pooja clean the floor and move furniture and other items from tha pooja to be performed. Spread sheets for Devotees to sit - Men and Women separately. Keep water and mug at the house entrance for Iyyappamars and others for cleaning their feet. Preferably choose a spot facing East if not North to place God's pictures with Garlands.

*Materials required:*

1. Pictures of Lord Ayyappa / Ganesha / Muruga/ Ambal / Parameshwar / Mahavishnu
2. Aasanam - Mat or Manal-2
3. Pancha Pathram & Uddharani - 1
4. Kalasam with Mango leaves - 1
5. Small Cups - 4
6. Small plates-2
7. Mani (Bell)
8. Malayala Kuthu Vilakku-3
9. Kamatchi Vilakku-1
10. Dhoopakkal/Deeparadhana Plate - 1
11. Trays or Brass plates-4
12. Coconut breaking iron bar
13. Cotton Wicks for lamps - 24 Nos
14. 3ft Garland for Ayyappa - 1
    1ft. Garlands for Vilakku - 3
    2 ft. Garlands for Picture - 2
15. Banana Leaf for Pooja - 10
16. Loose flowers like Arugam pull, Rose, Vilvam, Thulasi, Lotus, Lilly, Yellow Samandhi and other flower varieties for Archanas
17. Turmeric powder - 50 gms.
18. Raw Turmeric roots - 2
19. Betel leaves and Betel Nuts
20. Chandanam, Viboothi, Kumkum - 1 Packet each
21. Match Box
22. Blouse Bit - 1
23. Camphor 500 gms.
24. Agarpathi / Sambirani - 1 Packet
25. Coconut - 8
26. Aval & Pori - 1 small cup
27. Fruits for Naivedyam & Panchamirutham: Bananas and other varieties of fruits
28. Gingly Oil for Vilakku
29. Cow Ghee for Iyyappan Vilakku
30. Rose water (small bottle)
31. Honey (small bootle)
32. Sugar Candy 100 gms.
33. Dry Grapes / Dates 50 gms.
34. Raw Rice 1/2 measure
35. Prasad for Naivedyam (without onions and garlic in Prasadam)
36. Jaggery 200 gms.
37. Any type of Sundal
38. Jasmine Stitched flowers for distribution to women devotees
39. Candles-2
40. Clean Water 2 liters
41. 18 Steps if available
42. Padi Pooja Agal Vilakku-18
43. Duster Cloth for cleaning.
44. Dhakshina for priest.
45. Thambulam to all.

Lunch for Morning Pooja and light tiffin for evening Pooja to all.

## சபரிமலை செல்வதற்கான வழிகள் மற்றும் சபரிமலை போக்குவரத்து தகவல்கள்

1. எருமேலி வழியாக பெரியபாதையில் நடந்து செல்பவர்கள் அடர்ந்த காடு மற்றும் மலை வழியாக 61 கி.மீ.பயணம் செய்தால் சபரிமலையை அடையலாம்.
2. குமுளியிலிருந்து கோட்டயம் செல்லும் வழியில். 9 கி.மீ தூரத்தில் வண்டிப்பெரியார் உள்ளது. அங்கிருந்து, 12.8 கி.மீ. தூரம் சென்றால் சபரிமலையை அடையலாம்.
3. சாலக்கயத்திலிருந்து சபரிமலை செல்வதுதான் மிக எளிதான வழி. சாலக்கயத்திலிருந்து 4 கி.மீ. தூரத்தில் பம்பை உள்ளது. பம்பையிலிருந்து 7 கி.மீ. தூரத்தில் சபரிமலை உள்ளது.

தமிழ்நாட்டிலிருந்து

1. செங்கோட்டை-புனலூர்-பத்தனம்திட்டா வழி- 170கி.மீ.
2. குமுளி-வண்டிபெரியார்-எருமேலி-பிலாப்பள்ளி- 180கி.மீ.

சபரிமலைக்கு கோட்டயம் மற்றும் செங்கனூரிலிருந்து புனலூர் வரை ரயிலிலும், புனலூரிலிருந்து பம்பைக்கு பஸ்ஸிலும் செல்லலாம். சபரிமலைக்கு திருவனந்தபுரம், கொச்சி, நெடும்பாசேரி வரை விமானத்திலும், அங்கிருந்து பம்பைக்கு பஸ் மற்றும் கார் மூலமாக செல்லலாம். கோவை, பழநி, தென்காசி போன்ற இடங்களிலிருந்து வரும் கேரள அரசு பஸ்கள் பம்பைவரைக்கும் செல்லும். தமிழ்நாடு மற்றும் இதர மாநிலங்களிலிருந்து வரும் பஸ்கள் நிலக்கல்வரை மட்டும் அனுமதிக்கப்படும். அங்கிருந்து பம்பைக்கு கேரள அரசு பஸ்களில் மட்டுமே செல்ல முடியும்.

| புறப்படும் இடம் | சேரும் இடம் தூரம் |
|---|---|
| எருமேலி | பம்பா 56 கி.மீ. |
| கோட்டயம் | எருமேலி72கி.மீ. |
| கோட்டயம் | பம்பா 128 கி.மீ. |
| செங்கனூர் | பம்பா |
| திருவல்லா | பம்பா 99 கி.மீ. |
| எர்ணாகுளம் | பம்பா(வழி)கோட்டயம்200கி.மீ. |
| ஆலப்புழா | பம்பா 137 கி.மீ. |
| புனலூர் | பம்பா105கி.மீ. |
| பத்தனம்திட்டா | பம்பா 69 கி.மீ. |
| பந்தளம் | பம்பா 84கி.மீ. |
| திருவனந்தபுரம் | பம்பா 175 கி.மீ. |
| எர்ணாகுளம்எருமேலி(வழி)பாளை | பொன்குன்னம்175கி.மீ. |

# வேண்டுகோள்

"சபரிமலையில் இல்லாத ஆச்சாரங்களை உருவாக்கி, அதை பின்தொடர வேண்டாம்". பக்தர்கள் கண்ட இடங்களில் தேங்காய் உடைப்பது; பாதைகளில் கற்களில் அடுக்கி வைப்பது; கழுத்தில் அணிந்த மாலையை ஆங்காங்கே போட்டுச் செல்வது; உடுத்தியிருந்த ஆடைகளை பம்பையில் வீசுவது போன்ற இல்லாத ஆச்சாரங்களை பக்தர்கள் உருவாக்குகின்றனர். ஒருவர் செய்தால், அதை மற்றவர்களும் பின் தொடர்கின்றனர். இப்படிப்பட்ட ஆச்சாரம் சபரிமலையில் கிடையாது.

சபரிமலையைப் பொறுத்தவரை, குரு சங்கல்பத்தில் தான் எல்லாம் நடக்கிறது. குருசாமி கையால் மாலை அணிய வேண்டும்; அவர் தரும் அறிவுரைகளைக் கேட்க வேண்டும்; 41 நாட்கள் விரதம் இருக்க வேண்டும்; சபரிமலை பயணம் முடிந்த பின் எந்த கோவிலில் மாலை அணிந்தாரோ, அதே கோயில் அல்லது ஏதாவது ஒரு கோவிலில் மாலையை கழற்ற வேண்டும். அதுவும் குருசாமி வழியாகத்தான் செய்ய வேண்டும். அதைத்தவிர்த்து சபரிமலை, பம்பையில் கழற்றி போட்டு விட்டுச் செல்லக்கூடாது.

இவை பெரும்பாலும், கேரளாவை தவிர்த்த, இதர மாநில பக்தர்கள் தான் செய்கின்றனர். குருசாமிகள் பக்தர்களுக்கு அறிவுரை வழங்க வேண்டும். அதுபோல மாளிகைபுறம் கோவிலிலும், பக்தர்கள் தேவையற்ற செயல்களை செய்கின்றனர். நாகர் சிலைகள் மீது மஞ்சள், பொரி அவல் தூவுவது, பக்தர்கள் மீது பன்னீர் தெளிப்பது, பிளவுஸ் துணிகளை கோவில் கோபுரத்தின் மீது வீசுவது, இவை எல்லாம் இல்லாத ஆச்சாரங்கள் ஆகும். இதை பக்தர்களாக நினைத்து தவிர்க்க வேண்டும். 18ம் படி ஏறும்போது ஒரு தேங்காய் உடைக்க வேண்டும். திரும்ப செல்லும்போது ஒரு தேங்காய் உடைக்க வேண்டும். அதற்கான இடத்தில் மட்டுமே உடைக்க வேண்டும்.

சபரிமலை வரும் பக்தர்கள் ஒழுக்கநெறிகளை கட்டாயம் கடைபிடிக்க வேண்டும். வனப்பகுதிகளை அசுத்தம் செய்யக்கூடாது. ஐயப்பனின் பூங்காவனத்தை சுத்தமாக பராமரிக்கும் பொறுப்பை, ஒவ்வொரு பக்தனும் கடமையாக நினைத்து நிறைவேற்ற வேண்டும்.

